வயலூர் சண்முகம்

# டாணாமுத்து கதைப்பாடல்...



## பதிப்புரை

எளிய சந்தம், இலகுவான வார்த்தைகளைக் கொண்டு சிறுவர் சிறுமியர்க்கும், குழந்தைகளுக்கும் பாடப்படும் 'கதைப்பாடல்' என்னும் கவிதை வடிவத்தை இன்று கையாள்வோர் குறைவுதான்.

படிக்கச் சுவையாகவும், மனதில் இருத்திக் கொள்ள ஏற்ற எதுகை மோனை கொண்டவையாகவும் உள்ள இந்தக் கதைப்பாடல்களை எழுதிய கவிஞர் வயலூர் சண்முகம், தமிழிலக்கிய உலகில் முக்கியமான குழந்தை எழுத்தாளர்களுள் ஒருவர் என்று சொல்லலாம்.

இந்தத் தொகுப்பில் உள்ள கதைப் பாடல்களின் நீதிகளும் சமூகப் பார்வையும் நேற்றல்ல - இன்றல்ல - நாளை அல்ல, எக்காலத்திற்கும் தேவையானவை.

தமிழில், செம்மையாக, சிறுவர் இலக்கியம் படைக்கும் கவிஞர் தொகை குறைந்து கொண்டே வரும்நிலையில் கவிஞர் வயலூர் சண்முகத்தின் இந்த 'டானாமுத்து' கதைப்பாடல்கள் தொகுப்பு நூல், மாணவர்களுக்கு பயனுள்ளதாகவும் புதிதாக சிறுவர் இலக்கியம் எழுத முற்படுவோருக்கு வழிகாட்டியாகவும் அமையும் என்பது எனது நம்பிக்கை.

**மகிழ்வுடன்**

**எஸ்.ஆர். சுவாமிநாதன்**

## ஆசிரியர் சார்பாக ...

எனது தந்தையார் கவிஞர் வயலூர் சண்முகம் அவர்கள் ஏறத்தாழ முப்பது வருடங்களுக்கு முன்பு, எழுபதுகளில் எழுதிய கதைப் பாடல்களின் தொகுப்பு நூல் இது. இன்றைக்கு சிறுவர்-குழந்தைகளுக்கென நேர்த்தியாக எழுதுவோர் எண்ணிக்கை குறைவுதான். அதிலும் மரபுக் கவிதையின் எளிய வடிவங்களில் எழுதப்படும் கதைப் பாடல் என்னும் வடிவம் வெகுவாக குறைந்து போய் விட்டது என்றே சொல்லலாம்.

'கதைப் பாடல்' என்னும் இலக்கிய வடிவம் முளைத்த இடம், நாட்டுப்புற இலக்கியமென்னும் 'வாய்மொழி - செவிவழி' இலக்கிய வயல் வெளியே.

நல்லதங்காள் கதை, அல்லி அரசாணி கதை, பிரகலாதன் கதை, காத்தவராயன் கதை, கட்டபொம்மன் கதை, பெரிய மருதுகதை, சாகிப் மருதநாயகம் கதை போன்ற நாட்டார் வழக்காற்றியல் கதைகளே முதலில் தோன்றிய கதைப் பாடல்களாகும்.

இந்த கதைப் பாடல்கள் தெருக்கூத்து, மேடை நாடகம் என மெல்ல காலமாற்றத்தால் வடிவ மாற்றம் பெற்று திரைப்படம், தொலைக்காட்சி ஊடகத் தொடர்ச்சியாக இன்றைக்கு கணினி வரைகலைப் படம் (Computer Animation Film) வரை வந்து விட்டது.

எனது தந்தையார் கவிஞர் வயலூர் சண்முகம் அவர்கள் குழந்தை இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர். 'சிறுவர்களுக்கு சிறப்பாக எழுதும் ஆற்றல் பெற்றவர்களில் குறிப்பிடத் தக்கவர் என் நண்பர் மகாகவி சண்முகம்!' என்று உவமைக் கவிஞர் சுரதா அவர்களால் பாராட்டப் பெற்றவர்.

இந்த கதைப் பாடல்களின் உள்ளடக்கம், நீதி, ஆகியவை இன்றைக்கும் (எழுதப்பட்ட எழுபதுகளின் கால கட்டத்தை விட!) நமது சமூகத் தேவையாக, சமூக விழிப்புணர்வுக் கருத்துக்களாக அமைந்துள்ளன என்பது ஆச்சர்யம்.

நம் தமிழக முதல்வர் 'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர் அவர்கள், இந்தப் பாடல்கள் எழுதப்பட்ட அதே கால கட்டத்தில், எனது தந்தையாருக்கு நட்பு அடிப்படையில் ஒரு கடிதம்

எழுதியிருந்தார். அதில் "தமிழுக்கும், தமிழருக்கும், தமிழகத்துக்கும் தாங்கள் ஏதாவது செய்திட வேண்டுகிறேன். தங்கள் எழுத்தாற்றல் கொண்டு!" என்று குறிப்பிட்டிருந்தார். அந்த கடிதம் இப்போது என் நினைவுக்கு வருகிறது.

எதிர்கால தமிழகத்தின் சிற்பிகளான இன்றைய தமிழ்க் குழந்தைகளுக்கு இந்த நூல் மிகப் பயனுள்ளதாக இருக்கும் என்பது எனது நம்பிக்கை.

அன்றே, முத்துமுத்துக் கையெழுத்தால் இந்நூலை படிஎடுத்து வைத்திருந்த என் சகோதரி மாலாவுக்கும் உள் ஓவியங்கள் வரைந்து தந்த தம்பி திருவையாறு குருபாலாவுக்கும், என் தந்தையாரின் நூல்களைத் தொடர்ந்து செம்மையாக வெளியிடும் நண்பர் 'நிவேதிதா புத்தக பூங்கா' பதிப்பாளர் எஸ்.ஆர். சுவாமிநாதனுக்கும் என்றும் எனது அன்பின் நன்றிகள்.

**நேசமிக்க**

**எஸ். ராஜகுமாரன்**

புதிய எண் : 14, சிவாஜி தெரு,
தி.நகர், சென்னை - 600 017.
செல்பேசி : 9840124602

# 'டானா' முத்து!



முத்து என்பவன் முரட்டுப் பையன்!
சுத்த சோதா! சுயநலக் காரன்!
அத்தை உண்டு! அம்மா, அப்பா
செத்து விட்டனர், சின்ன வயதிலே!

சட்டிச் சட்டியாய்ச் சோறும், குழம்பும்
கெட்டித் தயிரும், கிழங்குக் கறியும்
அட்டியே இன்றி தினமும் தினமும்
கொட்டிக் கொண்டு கும்மாளம் அடிப்பான்!

மூளை மட்டும் முத்து வுக்கு
வேளை தோறும் வேகமாய்ச்சுழலும்!
பாளைப் பற்களால் பாங்காய்ச் சிரிப்பான்!
ஆளை மயக்குவான், ஆட்டம் போடுவான்!

ஏனோ படிப்பு ஏறவே இல்லை!
தானாய் பள்ளி போகவே மாட்டான்!
பேனா, பென்சில் டஜன்ட ஜனாக
நானா விதங்களில் வாங்கித் தொலைப்பான்!

அத்தை செல்லம் அவனை கெடுத்தது!
மெத்தை படுக்கை விரித்துப் போட்டு
மத்தியானம் வரையில் குறட்டை விடுவான்!
சத்தம் போட்டு மாலையில் எழுவான்!

அண்டை அயலார்; அனுதாபம் உள்ளோர்
கண்டித் தார்கள்! கேட்க மறுத்தான்!
சண்டைப் போடச் சகாக்களை எல்லாம்
ரெண்டு கட்சியாய்ப் பிரித்து வைத்தான்!

சேட்டு வண்டியில் பட்சணம் திருடுவான்!
மூட்டை வண்டியில் நெல்லைச் சரிப்பான்!
ஆட்டை மாட்டை அடித்து நொறுக்குவான்!
பூட்டை உடைப்பான் போக்கிரி முத்து.

முத்துவின் ஊர் பெயர் மூக்கன்பட்டி!
பத்துடன் ஐம்பது பழைய வீடுகள்!
சத்திரம்; கோவில் சந்தைத் திடலுடன்
மத்தியில் குளமும் மாந்தோப்பும் உண்டு!

புத்தக மூட்டையைக் குதிர்மேல் போட்டான்!
அத்தை மிரட்டியும் படிப்பை விட்டான்!
கத்தியும் கம்பும் கைகளில் பிடித்துச்
சத்திரம் தோப்பைச் சுற்ற லானான்!

அஞ்சாறு காலிப் பசங்கள் முத்துவின்
பிஞ்சு மனசைக் கெடுத்து விட்டனர்!
மஞ்சா பட்டம் *'கேட்டா பெல்ட்'டுடன்
பஞ்சு என்றொரு பாவியும் சேர்ந்தான்.

பஞ்சு முத்துவைப் பம்பரம் ஆக்கினான்.
'அஞ்சு' 'பத்தை' அத்தை வீட்டுக்
கஞ்சிக் கலயத்தில் 'கிளப்ப'ச் சொன்னான்!
கெஞ்சிக் குலவிக் 'கறக்க'ச் சொன்னான்!

---

* கேட்டா பெல்ட் : 'கவட்டிவாரு' என்றும் அழைக்கப்படும். உண்டிக்கோல் என்னும் இந்த கிராமிய வேட்டைக் கருவியால் பறவைகளை வீழ்த்தலாம். பழங்கள், காய்களை வீழ்த்தலாம்.

எல்லா வழியிலும் முத்து கெட்டான்!
பொல்லாத வனானான்! வயசு வளர்ந்தது!
நல்லோர் அவனை நாட வில்லை!
எல்லோரும் அவனை எதிரியாய் எண்ணினர்!

கோவில் காளையாய்க் கொழுத்த முத்துச்
சாவி பெட்டியுடன் அத்தை பணத்தைப்
பாவிப் பஞ்சு போதனை யாலே
தாவிப் பறிக்கத் திட்டம் போட்டான்!

அத்தை பார்வதியின் நெருங்கிய தோழி
ரெத்தி னாம்பாள்தான் ரகசிய மாக
முத்து - பஞ்சு மோசடித் திட்டம்
அத்தனையும் கூறி எச்சரித்து விட்டாள்!

மூக்கன் பட்டி புஞ்சைக் கரம்பில்
ஏக்கர்கள் மூன்றை அத்தை வாங்கி
சாக்கிர தையாகச் சாசனம் முடித்தாள்!
போக்கிரி முத்தோ ஏமாந்து போனான்!

காட்டுப் புஞ்சையைக் கழனியாய் ஆக்கி
மேட்டை நிரவி; வாய்க்கால் வெட்டி;
பூட்டுத் திறப்புடன் வேலியும் அடைப்பும்
போட்டே அத்தை பொறுப்புடன் காத்தாள்!

மருகன் முத்துவை தாஜா செய்து
முருகன் கோவிலில் சத்தியம் வாங்கித்
திருத்தப் பார்த்தாள்! தினமும் கழனியில்
ஒருவேளை யாவது உழைக்கச் சொன்னாள்!

"பாழூங் கிழமே! பார்வதி முண்டமே!
கூழாங் கல்லும் குத்தும் முள்ளும்
தாழைப் புதரும் நிறைந்த கழனியில்
கூழுக்கு உழைக்க என்னையா பார்த்தாய்?

பட்டினம் போகிறேன்! படத்தில் நடிப்பேன்!
பொட்டைக் காட்டில் மூக்கன் பட்டியில்
அட்டையாய் ஒட்டிக் கிடக்கவே மாட்டேன்!
சட்டை கசங்காமல் சம்பா திப்பேன்!

என்றே ஓர்நாள் இரைந்து கத்தி;
தின்ற இட்லியைத் தெருவில் எறிந்து
கன்றுக் குட்டியைக் காலால் உதைத்துச்
சென்று விட்டான் திருந்தா முத்து!

பாசமாய் வளர்த்துப் பாது காத்தே
மோசம் போனவள் மூன்றுநாள் அழுதாள்!
"நாச காலன், தொலைந்தான் போடி!
மாசம் இரண்டு கலங்கள் மிச்சம்!

வேலையைப் பாருடி! வேதனை தீரும்!
சாலைப் பக்கம் சாய்க்காதே கண்ணை!
ஓலைப் பெட்டியை நகர்த்தடி! புகையிலை
சேலையில் முடிய மறந்தேன்! கொடுடி!"

தோழி ரத்தினம் இப்படிச் சொன்னாள்!
கோழி, பூனைக் குட்டிகள் துணையாய்
நாழி அரிசியில் நாட்களை ஓட்டி
நாழிகை தோறும் பார்வதி உழைத்தாள்!

மெல்ல மெல்ல முத்துவின் நினைவும்
சல்லடை வழியே தண்ணீர்த் துளிபோல்
செல்லவே மூக்கன் பட்டியின் கழனிக்
கொல்லையே கதியாய் பார்வதி கிடந்தாள்!



அத்தை வீட்டில் கோவில் ஆடாய்
நித்தமும் வயிறு நிரம்பத் தின்றுப்
பித்தனாய் அடங்காதப் பேயனாய் ஆன
முத்து, பஞ்சுடன் பட்டினம் போனான்!

சின்ன வயதிலே சிகரெட் ஊதவும்
கன்னா பின்னாவெனக் கத்திச் சிரித்துப்
பொன்னான பொழுதைச் சூதாடிப் போக்கவும்
தன்னையும் மறந்து கற்றான் முத்து!

பஞ்சுவும் முத்துவைப் பகடையாய் உருட்டி
அஞ்சு பத்தாய்ப் பணத்தைக் கரைத்தான்!
கொஞ்ச நாளிலே கூலியா ளாகப்
பஞ்சையாய் முத்துவை நடத்த லானான்!

கையில் உள்ள காசும் தீர்ந்தது!
பையில் உள்ள பணமும் தீர்ந்தது!
பொய்யாய் முத்துவைப் படத்தில் நடிக்க
வைப்பதாய்ச் சொன்ன பஞ்சுதான் நடித்தான்!

"சோதனை என்பது சாதனைக் கேயடா!
வேதனை எல்லாம் வினாடியில் தீர்ந்திம்!
தோதாய் சினிமா வாய்ப்பு வந்திடும்!
ஆதலால் முத்து வருந்தாதே!" என்றான்.

எப்படி யேனும் படத்தில் நடித்து
கப்பல் போன்ற காரும்; வீடும்
முப்பது நாற்பது இலட்சமும் சேர்க்க
சொப்பனம் கண்டான் மீண்டும் முத்து!

தங்க மோதிரம் ஒன்றை விற்று
எங்கோ மூலை; முடுக்கில் எல்லாம்
'ரெங்கு' என்னும் ரிக்ஷாக் காரனுடன்
தங்கும் விடுதிகளில் தங்கி அலைந்தான்!

கடைசியில் பஞ்சு கரகரத்தக் குரலில்
"அடையாறு பக்கம் எனது மாமா
கடைவைத் திருக்கிறார்! கட்டாயம் அவரால்
நடக்கும் நமது காரியம்!" என்றான்!

சிங்கப்பூர் பேண்ட்டும்; டெரிலின் சட்டையும்
லுங்கிகளும் சேர்த்து இருநூறு ரூபாய்க்கு
ரெங்கு மூலமே விற்றான் முத்து!
சங்கிலி மட்டும் கழுத்தில் இருந்தது!

கையில் கொஞ்சம் பணத்தைக் கண்டதும்
பையன் களுக்கு குஷியும் வந்தது!
நெய்யிலே செய்த இனிப்பு களாகவே
"மை லாட்ஜ்" என்னும் ஹோட்டலில் முழுங்கினர்!

அன்று பகலே ஆபாச சினிமா
ஒன்றுக்கு 'பிளாக்'கில் டிக்கட்டு வாங்கிச்
சென்று பார்த்துத் திரும்பினர் லாட்ஜுக்கு!
பன்றிகள் போல இரவும் தின்றனர்!

ஒத்தை சிகரெட்டை ரெண்டு ரூபாய்க்கு
மெத்தவும் ஆசையாய் பஞ்சு வாங்கி
"நித்தமுமா குடிக்கிறாய்? ஏதோ ஒரு நாள்!!
முத்து! முத்து! குடிடா!" என்றான்!

எடுத்து வந்த பணமும் நகையும்
அடுத்து அடுத்தே பாழாய்ப் போனதால்
படுத்தும் தூக்கம் இல்லா முத்து
குடித்தான் அந்த உசத்தி சிகரட்டை!

அஞ்சாறு நிமிடத்தில் ஆனந்தத் தூக்கம்
கொஞ்சி வந்தது! கொட்டாவி விட்டான்!
நெஞ்சில் அத்தையின் நினைவுகள் சுழன்றன!
பஞ்சுவும் சிரித்து "குட் நைட்!" என்றான்!

★★★★★



முதுகில் தட்டி யாரோ தன்னை
அதட்டி எழுப்பக் கண்களைத் திறந்து
மெதுவாய்ப் பார்த்த முத்து திகைத்தான்!
பதினொன் றரைமணி, பொழுது விடிந்தது!

பக்கத்தில் நின்ற ஹோட்டல் பையன்
சொக்கு என்பவன், "தூக்கமா சாரு?
கொக்கு சாரு கோபிக் கிறாரே!
அக்கவுண்ட் குளோசாம்! எழுந்திரு!" என்றான்!

முத்துவின் தூக்கம் துக்கமாய் ஆச்சு!
பத்திர மாகப் படுக்கை அடியில்
வைத்தி ருந்த பணத்தைக் காணோம்!
கத்தினால் அதனால் கலாட்டா ஆகுமே!

பணத்துடன் 'கம்பி நீட்டி' விட்டக்
'குணாளன்' பஞ்சுவை மனதிலே திட்டினான்!
துணையும் இல்லை! துட்டும் இல்லை!!
கணைகள் பட்ட மானாய்த் துடித்தான்!

'கொக்கு சாரென்'ப் பையன் குறித்த
சக்கர வர்த்தி - விடுதி நிர்வாகி
துக்கத் தினாலே குமுறும் முத்துவை
அக்கறை யாக விசாரிக்க லானார்!

"திருட்டு விஷயம் வெளியே தெரிந்தால்
விரட்டும் போலீஸ் உன்னை! அதனால்
சரட்டு புரட்டெடன எங்கேனும் ஓடிடு!"
மிர ட்டி முத்துவை வெளியே துரத்தினார்!

போட்ட சட்டை வேட்டி யோடே
ரோட்டின் ஓரம் பசியால் மயங்கி
ராட்டினம் போலக் கண்கள் சுழல
கூட்டம் கூட முத்து விழுந்தான்!

நல்ல வேளை! ரிக்ஷா ரெங்கு
சொல்லி வைத்தது போல வந்தான்!
"எல்லோரும் விலகுங்க!" என்றே முத்துவை
மல்லாக்க நிமிர்த்திப் படுக்க வைத்தான்!

"என்னா நைனா? சினிமா ஸ்டாரு
பன்னு தின்னு! டீயைக் குடிப்பா!"
என்றெல்லாம் நைசாய் உபச்சாரம் பண்ணினான்!
தன்னா லானதைச் செய்வதாய்ச் சொன்னான்!

முத்து வுக்கும் கொஞ்சம் கொஞ்சமாய்ப்
புத்தி தெளிந்தது! பஞ்சுவின் மோசடி
குத்தும் முள்ளாய் நெஞ்சைக் கீற
அத்தையின் நினைப்பும் பயமும் சூழ்ந்தன!

ரெங்கு அதட்டினான், "என்னா ரோசனை?
எங்கே போவப் போறே இனிமே...?
இங்கே உள்ள பசங்க ளுக்கே
சிங்கிள் டீக்கு வழியைக் காணோம்...!"

என்றெலாம் ஏதோ சொல்ல வந்தவன்
நன்றாய் முத்துவின் முகத்தைத் தடவி
அன்றைக் கொருநாள் அவனிடம் கேட்ட
'ஒன்றை' அவனது இடுப்பில் பார்த்தான்!

ஃபேஷன் மிகுந்த ஹாங்காங் 'பெல்ட்' அது!
ரேஷன் சாப்பாடு வாங்கிக் கொடுத்தான்!
ஃபேஷன் 'பெல்ட்'டை வாங்கிக் கொண்டான்!
ஸ்டேஷனில் டிக்கட்டும் வாங்கிக் கொடுத்தான்!

சினிமாப் பைத்தியம் சிதறி ஓட
தனிமையில் முத்து ரயிலில் அழுதான்!
பனியூரில் உள்ள அவனது மாமா
தணிகாசலத்தின் நினைவு வந்தது!

பாதி வழியில் ரயிலை விட்டே
ஏதோ நினைவில் இறங்கிக் கொண்டான்!
நாதி யற்றவனாய் ஆனதை எண்ணி
பீதி அடைந்தான்! பிரமை அடைந்தான்!

போதை தந்திடும் 'ஃபாரின் சிகரெட்'டை
காதகன் பஞ்சு வாங்கிக் கொடுத்து
மீதி இருந்த பணத்தொடு ஓடிய
வேதனை யாலே முத்து துவண்டான்!

அத்தையின் முகத்தில் விழிக்கப் பயந்து
சித்திரை வெயிலில் கால்கள் பொசுங்க
உத்தமர் மாமா ஊரை நோக்கி
பத்துப் பதினைந்து மைல்கள் நடந்தான்!

★★★★★



பனியூர் என்பது பழைய கிராமம்!
கனிதரும் சோலைகள் காய்கறித் தோட்டம்
இனிமையாய்ப் பாடும் பறவைகள் நிரம்பிய
தனிமை யான ஊரே அதுவாம்!

பழைய ஊர்தான்! மக்களும் மிகுதி!
கழனியில், காட்டில் கட்டட வேலையில்
உழைக்கும் மக்களே அவ்வூர் வாசிகள்!
அழைக்கும்; அணைக்கும் பண்பிலே சிறந்தோர்!

முன்னம் ஓர்நாள் கோபத் தோடு
சென்று பிரிந்து பனியூரில் வாழ்ந்த
மன்ற வாணர் முத்துவின் தாய்க்கு
முன்னே பிறந்த முறைமா மனாவார்!

அந்த மன்ற வாணரிடம் 'தம்பிபோல்
சொந்தம் கொண்டாடி மாணவ ராகி
செந்தமிழ்ப் புலமையும் ஆங்கில அறிவும்
விந்தையாய்க் கற்றவர் தணிகா சலந்தான்!

பனியூர் பள்ளி புகழ்மிகக் கொண்டது!
இனிய காலை எட்டு மணிக்கே
பணியைத் தொடங்கிப் பகல்மணி ஒன்றுடன்
கணக்காய்க் கல்வி அலுவல்கள் முடிந்திடும்!

இப்படிப் பள்ளி அலுவல்கள் எல்லாம்
முற்பக லோடு முடிந்து விடுவதால்
அப்பள்ளி மாணவர்; ஆசிரியர் எல்லாம்
பிற்பகலில் தம்தம் பிறவேலை பார்ப்பர்!

ஆசிரியர் தணிகாசலம் அசராது உழைப்பவர்!
பேசிப் பேசியே பொழுதைப் போக்கார்!
பாசத் தோடே, பண்புக ளோடே
ஆசையாய்க் குடும்பம் நடத்தி வந்தார்!

மனதால் உழைப்பவர்! மதியால் உழைப்பவர்!
அனைத்துப் பொழுதிலும் அன்பால் உழைப்பவர்!
தனது குடும்பத்துடன் சமூகத்துக்கும் உழைப்பவர்,
பனியூர் தணிகாசலம் பெருமகனார் ஒருவரே!

அவரவர் வயது; திறமை; ஆற்றல்கள்
இவைகளுக் கேற்ப யாவரும் நாளும்
தவறாமல் உழைத்தே சாப்பிடு வதுதான்
அவசிய மானக் கடமை எ. 'பார்!

ஆசிரியர் பெற்ற மக்கள் ஐவர்!
காசைப் பணத்தைப் பெரிதாய் என்றும்
பூசிப்பவர் அல்லர்! புத்திரர் களையே
மாசிலாத செல்வங்களாய் மதித்து வந்தார்!

பைங்கிளி, அன்னம் இருவரும் பெண்கள்!
ஐயன் திருவடி, அழகு நம்பி;
மெய்கண்டான் மூவரும் பிள்ளை களாவர்!
நெய்போல் குணங்களும் நிறங்களும் கொண்டோர்!

தெய்வ நாயகி அவரது துணைவியார்!
பெய்யும் மழைபோல் பேருளங் கொண்டவர்!
எய்யும் அம்புபோல் சுறுசுறுப் புடையார்!
கை, கால் அசத்தினும் களிப்புடன் உழைப்பவர்!

பெண்கள் இருவரும் பிள்ளை களோடே
கண்க ளான கல்வி பெற்றவர்!
எண்ணிலும் எழுத்திலும் வித்தகம் உள்ளவர்!
தண்ணளி என்னும் தயைமிக நிறைந்தோர்!

பாடம் படித்தும்; பாட்டு கற்றும்
ஆடல் பயின்றும்; அம்மாவின் பணிகளில்
கூட இருந்து உணவு ஆக்கியும்
வீடு மகிழ விளங்கினர் பண்பால்!

மூத்த பிள்ளை ஐயன் திருவடி
தோத்திரம் திருக்குறள் அருமையாய்ப் பாடுவான்!
மாத்திரை, மருந்து என்பதே அறியான்!
காத்திர மான கட்டுடல் கொண்டோன்!

கூட்டுறவு நிறுவனம் ஒன்றில் எழுத்தனாய்
ஏட்டுக் கணக்குகள் எழுதி ஊதியம்
மேட்டிமை யாகப் பெற்ற போதும்
வீட்டுறவில் அவனால் மகிழ்ச்சியே என்றும்.

அந்த ஊரின் அருகே தோன்றிய
கந்தன்நகர் என்னும் காலனி ஒன்றில்
பிந்திய பிள்ளை அழகு நம்பித்
தந்தையைப் போல ஆசிரியராய் இருந்தான்!

பின்னவன் மெய்கண்டான் ஓர்விவ சாயி!
செந்நெலும் கன்னலும் அவனது ஜீவன்!
பண்ணை ஒன்றைக் குத்தகை எடுத்து
மண்ணைப் பொன்னாய் ஆக்கி வந்தான்!

நாட்கள் தோறும் பிற்பகல் வேளையில்
ஆட்கள் யாரையும் தேடா மலேயே
வீட்டுப் பின்புறம் வேலி அமைத்தத்
தோட்டம் தன்னில் தணிகாசலம் உழைத்தார்!

கீரை வகைகளும் கிழங்கு வகைகளும்
சாரையாய் நாற்புறம் தென்னை மரங்களும்
தாருடன் நிற்கும் வாழை மரங்களும்
ஊரே வியக்க தணிகாசலம் வளர்த்தார்!

அவரை; வெண்டி, பீர்க்கன்; பாகல்
துவரை; முருங்கை; தக்காளி மிளகாயுடன்
தவழும் பச்சைக் கொடிக ளோடே
நவநவ மான பூச்செடிகளும் உண்டு!

பக்கத் திலேயே பசுக்கள்; கோழிகள்
எக்க ளிப்புடனே இரையுண்டு வளர்ந்தன!
மிக்க உழைப்பால் மிகுந்தன! பெருகின!
தக்கவர் பேணினால் தழைக்காததும் உண்டா?

நெய்யும் பாலும் காயும் கனியும்
தெய்வ நாயகியின் "தேவாமிர்த"ச் சமையலும்
தையல்கள்; பிள்ளைகளின் தளராத பாசமும்
மெய்யாய் அவரைப் பூரிக்க வைத்தன!

★★★★★



அழகு நம்பி அன்றைய தினத்தில்
முழுதும் பள்ளி அலுவலில் மூழ்கி
பொழுது சாயும் வேளையில் பனியூர்
வழியில் சைக்கிளில் வந்து கொண்டிருந்தான்!

சாலை ஓரம் சுமைதாங்கி அருகே
ஓலைத் தடுக்கில் அங்காடி விற்கும்
வேலாயி கிழவியிடம் அப்பொழுது ஒருவன்
'வாலாட்டி' உதைகள் வாங்கிக் கொண்டிருந்தான்!

"அடிக்காதே அவனை! விட்டு விடு"ென்று
பிடித்துப் பையனை விலக்கி விட்டுக்
கடைக்காரி யிடத்தில் காரணம் கேட்டான்
இடையே புகுந்த அழகு நம்பி!

அஞ்சு நிமிசம் அந்தண்டை போனேன்!
இஞ்சே இருந்ததை எல்லாம் திருடி
பஞ்சைப் பயஇவன் முழுங்கிப் புட்டான்!
நெஞ்சை உடைக்கணும் ரௌடிக் கழுதையை"!

கிழவி அலறி மீண்டும் பாய்ந்தாள்!
அழகு நம்பி அடக்கினான் மீண்டும்!
பழங்கள் மிட்டாய்களைப் பசியால் திருடி
'முழுங்கியதை'ப் பையனும் ஒப்புக் கொண்டான்!

பையன் உண்மையை ஒப்புக் கொண்டதும்
கையைப் பிசைந்து; தலையைக் கவிழ்த்து
'ஐயா! மன்னியுங்கள்!" என்று சொல்லி
மெய்நடுங்க அழுததும் நம்பியை உருக்கின!

பையன் தின்ற பண்டங் களுக்காகக்
கைப்பணம் ஐந்து ரூபாய் கொடுத்தான்!
"வையாதே கிழவி! பாவம் பசியால்
செய்து விட்டான்!" என்றான் நம்பி!

அடுத்த நிமிடம் கதறி விம்மி
நெடுஞ்சாண் கிடையாய் நம்பி காலில்
"படீ"ரென்று விழுந்தான் அந்தப் பையன்!
கொடுத்துக் காத்தக் கைகளை வணங்கினான்!

"நிசமாய் எனக்கு நீங்கள்தான் தெய்வம்!
வசமாய் கெட்டு அனாதையாய் ஆனேன்!
பசியால் திருடிய பாவமும் செய்தேன்!
உசிரைக் காக்க மானம் இழந்தேன்!"

இப்படிக் கூறி இன்னும் ஏதோ
செப்பிய அவனைச் சேர்த்தே அணைத்தே
"தப்பைநீ உணர்ந்ததே தண்டனை யாகும்!
அப்பாநீ யாரென?" அவனைக் கேட்டான்!

அந்தப் பையன் சொன்ன கதைகள்
விந்தையாய் நம்பியை வியக்க வைத்தன!
அந்தரங் கமாக அவனிடம் பேசி
சொந்த சைக்கிளில் ஏற்றிக் கொண்டான்!

★★★★★



நேரம் கழித்து வீடு வந்த
காரணம் கேட்க அழகு நம்பியைப்
பார்த்த தணிகாசலம் பதறிப் போனார்!
ஓரமாய் அவனுடன் முத்துவும் நின்றான்!

"மாமா! மாமா!" என்று தேம்பி
'காமா சோமாவாய்' ஏதோ உளறினான்!
"ஆமாம்...! முத்து, இங்கே எப்படி?"...
தாமாக்வே கேட்டார் தணிகா சலந்தான்!

நண்பன் ஒருவன் பேச்சைக் கேட்டுக்
'கண்ணன் பேக்கரி' என்னும் கடைக்கு
பண்டங்கள் விற்கும் பணியாள னாகச்
சென்னைக்கு முத்து சென்றதாகவும்

வேலை கிடைக்க வாய்ப்பும் இன்றி
காலிப் பயல்களால் கைப்பணம் இழந்து
வேளை தோறும் பட்டினி கிடந்து
ஆளே பிழைத்தது அதிசய மாக

சொந்த ஊர்போக விரும்பி டாமல்
வந்த தாகவும் அழகு நம்பி
தந்திர மாகத் தன் குடும்பத்தாரிடம்
நொந்த முத்துவைக் காட்டிக் கொடுக்க

எண்ணமில் லாமல் காப்பாற்றி விட்டான்
கண்ணியம் இழந்த முத்துவும் மாமா
புண்ணியத் தாலே புதிய வனாய் உழைக்க
திண்ணம் கொண்டான்! உறுதியும் சேர்ந்தது!

★★★★★



'நல்ல குடும்பம் பல்கலைக் கழகம்'
அல்லவா? அதனால் ஆசிரியர் வீடே
எல்லா வகையிலும் உழைப்பால் உயர்ந்து
சொல்லரும் புகழுடன் துலங்குதல் கண்டான்!

தணிகா சலத்தின் குடும்பத் தாருடன்
பிணைத்துக் கொண்டு 'வாழ்க்கை' என்னும்
இணையிலாக் 'கல்வி'யை முத்து பெற்றான்!
பணத்திலும் பெரிதாய்ப் பண்பைக் கண்டான்!

அத்தை பார்வதி வாங்கிய நிலத்தில்
பத்தில் இரண்டு பங்கும் இல்லா
மெத்தவும் சிறிய இடத்தில் மாமா
வித்தையாய்க் காய்கனி விளைத்தல் கண்டான்!

அஞ்சில் வளையாத அகம்பா வத்தால்
பிஞ்சில் பழுத்தப் பெரும்பிழை யாலே
நெஞ்சிலே துன்பம் மிகவும் அடைந்தான்!
தஞ்சம் தந்த மாமாவை வணங்கினான்!

★★★★★



உத்தம ராக உலகில் வாழ்வோர்
அத்தனை பேருக்கும் ஏதேனும் ஓர்குறை
நித்தமும் அவர்களை வருத்துதல் இயற்கை!
உத்தமர் தணிகாசலமும் ஓர்துய ருற்றார்!

அன்னம் என்னும் இளைய மகளுக்கு
என்ன காரணமோ இடது கைதான்
சின்ன தாகச் சூம்பித் தொய்ந்து
வின்னம் போல விளங்கியது! பாவம்!!

அழகும் அறிவும் அடக்கமும் உடையவள்!
பழகு வதற்கும் இனியவள் அன்னம்!
குழந்தை போலக் கபடம் இன்றிப்
பொழிந்தாள் அன்பை முத்து விடத்தே!

முத்து சிறுவனாய்த் தொடக்கப் பள்ளியில்
சித்திர அரிச்சுவடி எழுத்து கூடப்
புத்தியாய்க் கருத்தாய்க் கற்க வில்லை!
அத்தை முயன்றதும் வீணாய்ப் போச்சு!

'ஆனா' 'ஆவன்னா' எழுத்துக்கள் கற்கவே
ஆனான பாடெல்லாம் பட்டான் முத்து!
ஏனோ அவனுக்கு எழுதவே வெறுப்பு!
'டானா' மட்டுமே எழுதக் கற்றான்!

ஆங்கில எழுத்தில் 'ஓ' வைப் போலவே
ஈங்கும் 'டா'னா என்னும் எழுத்தைத்
தூங்கி வழியும் பச்சைப் பிள்ளையும்
பாங்காய் எழுத எளிதாய்க் கற்கலாம்!

மக்கு முத்துவும் மிகவும் எளிதாய்
'டக்'கென்று 'டானா' எழுதக் கற்றான்!
பக்கம் பக்கமாய் 'டானா' மட்டுமே
அக்கறை யாக எழுதிக் குவித்தான்!

'தே'னா முத்தென இன்னொரு முத்து!
மானேஜர் பிள்ளை! முத்துடன் பயின்றான்!
ஆன தினாலே கேலி யாக
'டானா முத்தென' இவனை அழைப்பார்!

பிள்ளை களிடத்தே இதனை ஓர்நாள்
சொல்லி விட்டார் தணிகா சலந்தான்!
மெல்ல மெல்ல விளையாட் டாக
எல்லோரும் முத்துவை 'டானா' என்றனர்!

'டானா'வாகவே தானிருந் தாலும்
'டானா' பெயரால் தன்னை அழைப்பதை
ஏனோ முத்து ஏற்கவே இல்லை!
தானாய்த் தனியே அதற்காய் அழுதான்!

'டானா' அத்தான் முத்து மீது
தேனாய் அன்பைப் பொழிந்த அன்னம்
பேனா பேப்பர் எடுத்துக் கொடுத்து
'ஆனா ஆ'வன்னா கற்றுக் கொடுத்தாள்!

தோட்ட வேலையில் மாமா வுக்கும்
வீட்டு வேலையில் அத்தைக்கு மாக
வாட்டம் இன்றி; வஞ்சம் இன்றி
நோட்டும் கையுமாய் உதவிகள் செய்தான்!

அத்தை அன்பும், மாமா அன்பும்
செத்துப் போன அம்மா அப்பா
வைத்துப் போன சொத்தைப் போலவே
முத்துவைத் திருத்தி சிந்திக்க வைத்தன!

"கராத்தே" என்னும் ஜப்பான் நாட்டு
அருமை யான வீரக் கலையை
பெரிய அத்தான் திருவடி யிடத்தே
முறைப்படிக் கற்று நிபுணன் ஆனான்!

திறமையாய்க் 'கராத்தே' தினமும் பழகினான்!
உறுதியாய் உடலையும் பாது காத்தான்!
முறுக்கியும் சுழற்றியும் எதிராளி உடலை
வெறும்கை களாலே வீழ்த்தவும் கற்றான்!

படிப்பகம் சென்று பத்திரிகை படித்தான்!
நடிப்பகம் சென்று நாடகம் கண்டான்!
அடுப்படியில் சோறு ஆக்கவும் கற்றான்!
படிப்படி யாக முத்து வளர்ந்தான்!

வஞ்சகர், கயவர் தேசத் துரோகிகள்
கஞ்சா அபினி கடத்து வோரோடு
பஞ்சுவும் சேர்ந்து காவலில் சிக்கியதை
கொஞ்ச நாளிலேயே இதழ்களில் அறிந்தான்!

ஆறேழு மாதங்கள் ஆசிரியர் வீட்டில்
நூறு நூறு நூதன விஷயங்கள்
கூறவும் எழுதவும் கற்றுத் தெளிந்தான்!
ஆறுதல் மாறுதல் அடைந்து வந்தான்!

புதிய மனிதனாய்ப் புத்தி சாலியாய்
எதையும் செய்யும் இயல்புள் ளோனாய்
விதியையே மாற்றிய வீரனாகவே
மதிமுக அன்னத்தால் மாறிவிட்டான்!

மூக்கன் பட்டியின் நினைவு முளைத்துத்
தூக்கத்தில் கூட அத்தையைத் துதித்தான்!
ஏக்கம் கொண்டான்! ஏதோ நல்லதோர்
நோக்கத் துடனே நாட்களைக் கழித்தான்!

★★★★★



ஈட்டுதல் போல எஞ்சிய நிதியை
வீட்டுக் குடும்பம் பிற்காலம் வாழ;
நாட்டுத் தொழில்கள் தொண்டுகள் வளர
கூட்டுக் கணக்கில் ஆசிரியர் சேமித்தார்!

ஒவ்வொரு குடும்ப உறுப்பி னருக்குமே
ஒவ்வு மாறு ஊதியம் தந்தார்!
அவ்வகையில் மனைவி மக்கள் ஆகியோருடன்
செவ்வையாய் முத்துவும் சேமிக்க வைத்தார்!

தனது மருகனே என்ற போதும்;
தனது வீட்டில் சரண்புகுந்தோன் ஆயினும்
மனதில் நிறைவுடன் முத்துவின் உழைப்பும்
கனிவும் கண்டு சம்பளம் தந்தார்!

'சிறுதொகை' ஆயினும் சேமிப்பு நலனே!
பெருகும் வெள்ளமாய்ப் பின்னர் ஓர்நாள்!
அறுசுவை உண்டி; ஆடைக ளுடனே
வருமானமும் சேமிப்பும் முத்துவை உயர்த்தின!

ஆசிரியர் மாமா, அத்தை; அத்தான்கள்;
வாசிக்க வைத்த அன்னம், பைங்கிளி
பேசும் தெய்வங்களாய் அவன்மனம் புகுந்தனர்!
மாசங்கள் முப்பதும் மறைந்தன விரைவாய்!

*****




ஒருநாள் காலை ஒன்பது மணிவரை
மருமகன் முத்துவை வீட்டில் காணோம்!
மறுநாளும்; மறுநாளும் அவன்வர வில்லை!
புரியாத புதிராய் முத்து மறைந்தான்!

வழக்கம் போல ஞாயி றன்று
புழைக்கடைக் கொட்டகையில் தணிகா சலனார்
நுழைந்து திருக்குறள் நூலைப் பிரித்தார்!
வழியும் அன்புடன் அதிலொரு கடிதம்!

'அருளே வடிவாம் மாமா! அத்தை!
சிறுவன் வணக்கம்! சேமிப்பு நிதியில்
இருபது ரூபாய்கள் மட்டும் செலவுக்கு
நிரம்பவும் வருந்தி எடுத்துச் செல்கிறேன்!

பிச்சைக் காரன்போல் புகுந்த என்னை
அச்சம் போக்கி; அறிவு ஊட்டி
இச்சையுடன் ஆளாக்கி வைத்தீர்! நன்றி!
நிச்சயம் மீண்டும் விரைவில் வருகிறேன்!

நன்றிக் கடனாய் எனக்கொரு கடமை
அன்று தொட்டே அழைக்கிறது என்னை!
இன்று போகிறேன்! எல்லோர்க்கும் நன்றி!
என்றுமே உங்களை மறவா முத்து!'

வந்தவன் போனதில் வருத்தம் இருப்பினும்
சிந்தையில் முத்துவின் சேவை இனித்தது!
முந்தைய 'டானா' முத்துவா, அவன்தான்?
வந்துவிடு வானென கவலை விடுத்தனர்!

★★★★★



மூக்கன் பட்டியில் முத்துவின் அத்தைப்
போக்கிரி ஒருவனைப் பொல்லா வேளையால்
ஆக்கிய பயிர்களை அனுசரனை யாகக்
காக்கச் சொல்லிக் கைப்பணமும் கொடுத்தான்!

நிலத்தில் இருந்த மரங்களை வெட்டியும்;
குளத்தில் இருந்த மீன்களைப் பிடித்தும்
விலைகொடுக் காமலேயே பழங்களைப் பறித்தும்
அலைக்கழித்து விட்டான் அந்தப் போக்கிரி!

அத்துடன் பார்வதி உடம்பும் கெட்டது!
பித்த மயக்கமும் இடுப்புப் பிடிப்பும்
சித்திரவதை செய்தன! எவரும் கனிவுடன்
ஒத்தாசை செய்யவோ முன்வர வில்லை!

ரத்தினாம் பாளும் திருப்பதி போனாள்!
நித்தமும் பார்வதிக்கு பலப்பல தொல்லைகள்!
கொத்திப் பிடுங்கும் கழுகுகள் போல
எத்தனையோ ரௌடிகள் அவளை மிரட்டினர்!

பதினைந்து குண்டர்கள் பகலிலேயே ஓர்நாள்
குதிரில் உள்ள நெல்முழு வதையுமே
அதிகாரி கள்போல மிரட்டிப் பார்வதியை
உதைத்துக் கேட்டனர்! உறு[illegible]னர்! பாய்ந்தனர்!!

பார்வதி "ஐயோ"வெனப் பதறினாள்! கதறினாள்!
ஊரார் அனைவரும் தீமிதித் திருவிழாப்
பார்ப்ப தற்காகப் பக்கத்தூர் சென்றனர்!
யார்வந்து உதவுவார்? என்னதான் செய்வாள்?

திக்கற்ற பார்வதிக்குத் தெய்வமே துணையாய்
அக்கணத் திலேயே அங்கே வந்தது போல்
கொக்கரித்த குண்டர்கள் கும்மாளம் அடங்க
மிக்கவும் நல்லதோர் சம்பவம் நடந்தது!

அந்த நேரம் அற்புதம் நிகழ்ந்தது!
வந்தான் அங்கே வயோதிகன் ஒருவன்!
'தந்தணத்தான்' பாடினான்! தாடியை
உருவினான்!
அந்த ரௌடிகள் அவனையும் வளைத்தனர்!

தாடிக் காரன் தன்வெறுங் கைகளாலே
ஆடிச் சுழன்று சண்டைகள் செய்தான்!
'போடு போடென' போட்டு நொறுக்கி
ஓட ஓட ரௌடிகளை விரட்டினான்!

பார்வதி கிழவனை வியப்புடன் பார்த்தாள்!
"யாரய்யா நீங்க? புண்ணிய வானே!
நேரத்திலே வந்து நெல்லையும் என்னையும்
வீரமா காப்பாத்தி விட்டீங்க ஐயா!"

இப்படிச் சொல்லிக் கிழவன் காலைக்
கப்பிக் கொள்ள வந்தாள் கிழவி!
அப்படியே அவளது காலில் வீழ்ந்து
"இப்படியா செய்வது?" என்றான் வந்தவன்!

மீசைகள் தாடியைப் பிய்த்தே எறிந்தான்!
ஆசை பொங்க "அத்தை!" என்றான்!
தூசித் தரையில் விழுந்து வணங்கினான்!
பேச வராமல் மலைத்தாள் அத்தை!

"முத்து!" "முத்து!!" முத்தெனக் கூவினாள்!
அத்தை பார்வதி அவனை அணைத்து
முத்தம் கொடுத்தாள்! உச்சி மோந்தாள்!
சத்தம் போட்டாள், சந்தோ ஷத்தாலே!

சகவாச தோஷத்தால் தான்கெட் டதையும்;
மிகமிகத் துன்பம் அவமானம் பட்டதையும்
வகையாய்த் தணிகாசல மாமா உதவியால்
புகழ்பெறத் திருந்தி வந்ததும் உரைத்தான்!

தனது பெயரால் சாசனம் முடித்து
மனைக்கட்டுப் புஞ்சை மாந்தோப்பு எல்லாம்
தினமும் பார்வதி காத்த செய்திகள்
அனைத்தும் முத்துவும் அறிந்து மகிழ்ந்தான்!

மாமா வீட்டில் முத்து கற்றது
சாமான்ய அறிவா? சாதாரணக் கல்வியா?
கோமாளித் தனங்கள்; குரங்குத் தனங்கள்
ஏமாளித் தனங்கள் எல்லாம் விட்டான்!

கெட்டுப் போனதால் பட்டினம் போனவன்
பட்டினம் போனதால் மேலும் கெட்டான்!
பட்டிக்காட்டு மாமா வீடே
கெட்டிக் காரனாய் முத்துவை ஆக்கியது!

★★★★★



திரும்பி வந்தவன்; திருந்தி வந்தவன்
விரும்பி விரும்பி விவசாயம் செய்தான்!
அரும்பும் வியர்வை சொட்ட நிதமுடன்
கரும்பும் நெல்லும் கழனியில் விளைத்தான்!

மூக்கன் பட்டிக்கே முன்னோடி யானான்!
ஆக்கும் பணிக்கே அறிவைச் செலுத்தினான்!
நாக்கில் தமிழ்த்தாய் நடனம் ஆடக்
காக்கும் கல்வியும் தானே பயின்றான்!





ஆண்டுகள் நான்கும் ஓடிமறைந்தன!
வேண்டும் அளவு பொருள்கள் ஈட்டினான்!
பாண்டு ரங்கம் என்பவர் மூலம்
தூண்டினாள் பார்வதி திருமணத்துக் காக!

சொத்து பத்துடன் பலரும் வந்தே
முத்துவுக்குத் தம்தம் மகள்களைக் கொடுத்துச்
சித்திரைக் குள்ளே திருமணம் முடிக்க
அத்தையிடம் ஏதேதோ ஆசைகள் காட்டினர்!!

தன்னை மனிதனாய் ஆக்கிய மாமா
பெண்ணாம் அன்னம் ஒருத்தியையே
உண்மையில் மணக்க விரும்பு வதாகக்
கண்டிப்பாய் முத்து சொல்லி விட்டான்!

"கையொன்று சூம்பிய அன்னத்தை மணக்க
பையா உனக்குப் பைத்தியமா?" என்றனர்!
கையின் ஊனம் காதலுக்கு உண்டா?
வைகாசி யிலேயே திருமணம் நடந்தது!

★★★★★



அன்னம் - முத்து தம்பதிகளாகி
பின்வந்த நாளிலும் பெற்றோர் அத்தை
இன்முகம் காட்டவே இல்லறம் நடத்தினர்!
தன்னாலேயே உயர்ந்தான் 'டானா முத்து'!

✧ ✧ ✧

# ஒரே ஒரு வரம்!

கந்தன் என்பவன் ஓர் ஏழை!
கண்கள் இரண்டும் பார்வை இலான்!
சுந்தரி என்பவள் அவன் மனைவி!
தூய குணங்கள் மிகவுடையாள்!

குருடனாய்க் கணவன் ஆனதிலும்;
குடும்பம் வறுமை கொண்டதிலும்
பெரிதும் துயருறும் சுந்தரிக்குப்
பிள்ளைப் பேறும் வாய்க்கவில்லை!

கந்தன் - சுந்தரி தம்பதிகள்
கஷ்டம், துன்பம் பட்டாலும்
எந்த நேரமும் கடவுளையே
எண்ணித் தொழுதே வந்தார்கள்!

'கணவனின் குருடு தீராதா?
கனிபோல் குழந்தை பிறக்காதா?
பணமும், சொத்தும் சேராதா?
பயனுள வாழ்வும் சிறக்காதா'?

என்றே ஏங்கி சுந்தரிதான்
ஏற்றக் கணவன் கந்தனுடன்
நன்றே பற்பல நோன்புகளை
நாளும் முறையாய் நோற்றாளே!

பத்தினித் தவந்தான் பலிக்காதா?
பண்ணிடும் புண்ணியம் கெலிக்காதா?
உத்தமன் கந்தன் பக்தியதும்
உண்மை திண்மை நிறைந்ததன்றோ?

எல்லாம் வல்ல இறைவனவன்
இரக்கம் கொண்டான் அவர்கள்பால்!
நல்ல நேரம் வந்து விட்டால்
நடக்கா ததுஎது இவ்வுலகில்...?

அந்தத் தம்பதிகள் செய்தவத்தை
அரியது; பெரியது எனமெச்சி
வந்தான் இறைவன் ஓர்சாது
வடிவம் கொண்டே, ஓர்நாளில்!

"சாமீ! சாமீ! சரணம்!" எனச்
சாதுவை வணங்கி உபசரித்தே
பூமியும், பொருளும் வரம் கேட்டார்!
புத்திரப் பேறுதனைக் கேட்டார்!

ஆசைக் கணவனின் குருடதுவும்
அகன்றே விழிகள் ஒளிபெறவும்
பூசை புரிந்தே சாதுவிடம்
புனிதை சுந்தரி வரம் கேட்டாள்!

"ஆஹா! உங்கள் தவம் நன்று!
அன்பும், பண்பும் மிகநன்றே!
"ஓஹோ எனவே புகழ்பெருகும்
ஒரே ஒரு வரமே நான் கொடுப்பேன்!

கணவனின் குருடு நீங்குவதா?
கன்னியின் மலடு நீங்குவதா?
பணமும் காசும் கலகலக்கப்
ப( )த்தும் வறுமை நீங்குவதா?

"எதுதான் வேண்டும் சொல்லிடுவீர்!
இவைகளில் ஒன்றே கேட்டிடுவீர்!
மெதுவாய்த் தயங்கிக் குழப்பாதீர்!"
விரட்டினார் சாது இவ்வாறாய்!

சதையும் நகமும் போல் இணைந்த
தம்பதி கள்தாம் என்செய்வார்?
எதனைக் கேட்டே எதை விடுப்பார்?
எளிதோ இறைவனின் விளையாட்டே

மனைவியின் மலடு; தன்குருடு
வறுமை துன்பம் அனைத்தும் போய்
இனிதாய்க் கொஞ்சும் மழலையுடன்
இன்பம் செல்வம் பெறவேண்டும்!

எந்த விதத்தில் இவை பெறவே
ஏக வரத்தைக் கேட்பதெனக்
கந்தன் சிந்தனை செய்திட்டான்!
காரிகை சுந்தரி தவிதவித்தாள்!

கந்தா! இனியும் தயங்காதே!
கணத்தில் மறைந்தே போய்விடுவேன்!
"சந்ததி"; "பார்வை"; "சுகசெல்வம்"
சடுதியில் சொல்வாய் எதுவேண்டும்?"

வந்த சாதுவும் எழுந்துவிட்டார்!
வனிதை சுந்தரி பயந்து விட்டாள்!
கந்தன் சாதுவைத் தொழுதபடிக்
"கடவுளே! நிற்பீர்!" எனச் சொன்னான்

"கூட கோபுர மாடங்கள்
கொண்ட மாளிகை ஒன்றினிலே
ஆடல், பாடல் மிகுந்திடவே,
அழகாய் என்றன் குழந்தைகளும்

"தங்கத் தட்டில் சோறுபழம்;
தவளக் கிண்ணியில் பால்தேனை,
பொங்கும் மகிழ்வுடன் தாயூட்டப்
புசிக்கும் அற்புதக் காட்சிகளை

"என்றன் இரண்டு கண்களாலே
என்றும் கண்டு களித்திடவே,
ஒன்றே ஒன்றாய் ஒருவரம் தான்
உவந்தே அளிப்பீர்!" எனக் கேட்டான்!

சாதுவாய் வந்த கடவுள்தான்
"தந்தேன்! தந்தேன்! அவ்வாறே!
தோதாய் வரமும் கேட்டிட்டாய்!
சூட்சம புத்தியால் வென்றிட்டாய்!

"அன்பு; பண்பு; பொறுமையுடன்
அறிவு பக்தி சேர்ந்துவிட்டால்
துன்பம் எல்லாம் ஓடிவிடும்!
சுகமும் வளமும் கூடிவிடும்!

இந்த உண்மைத் தத்துவத்தை
யாவரும் உன்னால் உணர்ந்திடுவார்!
கந்தா! சுந்தரி! வாழ்க!" எனக்
கடவுளாம் சாதுவும் மறைந்து விட்டா.

ஊனம்; வறுமை துன்பத்தால்
உள்ளம் தளரா தம்பதிகள்
"ஞானம்", "பொறுமை" "பக்தி" களால்
நயந்த யாவும் அடைந்தார்கள்!



# தண்டச் சோறு!



சாமி வேலு என்பவன்தான்
சாது வான பையனாம்!
மாமி கோதை வீட்டுக்கே
மாடுகள் மேய்த்து வந்திட்டான்!

தங்க ராசு, அவன்மாமா!
தங்க மான மனிதர்தான்!
புங்கம் பட்டி ஊருக்குள்
பூமி சொத்து பெற்றிருந்தார்!

கோதை-ராசு தம்பதிக்கே
குடும்பத் தொழிலே பயிர்த்தொழில்தான்!
நாதன், நங்கை அவர் மக்கள்!
நமது வேலு பணியாள் தான்!

அந்தக் குடும்பம்; வீட்டுக்குள்
    அண்டிப் பிழைத்து வாழ்ந்திடவே
வந்தப் பையன் வேலுவுக்கு
    வாதைகள் வந்தன, கோதையினால்!

மாடு மேய்க்க வந்தவனே
    மாடு மாதிரி உழைத்திட்டான்!
காடு கரம்புத் தோட்டத்தில்
    காரியம் யாவும் செய்திட்டான்!

காலை மாலை இருபொழுதே
    கஞ்சிச் சோறு போட்டிடுவாள்!
மூலை மாட்டுக் கொட்டிலிலே
    முடங்கிக் கிடக்கச் சொல்லிடுவாள்!

சாதுப் பையன் வேலுவுந்தான்
    சாமி கொடுத்த வரமாக
ஆதி நாளில் இருந்திட்டே
    அருமையாய் வேய்ங்குழல் ஊதிடுவான்!

புல்லாங் குழலைப் பிடித்தவன்தான்
    புதுப்புது சினிமாப் பாடல்களை
எல்லோர் மனதும் களித்திடவே
    இனிமை யாக ஊதிடுவான்!

நாதனும் போட்டியாய்த் தன்குழலில்
நாளும் ஊதிப் பார்த்திட்டான்!
கோதை மாமியும் தன்மகனைக்
கொஞ்சி ரொம்பவும் மெச்சிட்டாள்!

வேலு ஊதும் பாட்டைத்தான்
விரும்பி யாவரும் கேட்டிட்டார்!
நாலு ஐந்து பேர்கூட
நாதன் பாட்டை விரும்பவில்லை!

கோதை இதனால் மேன்மேலும்
கொடுமைப் படுத்தினாள் வேலுவையே!
"சோதாப் பயலே! போடா!" வெனச்
சோறு போடவும் மறுத்திடுவாள்!

நங்கை மட்டும் வேலுவையே
நல்ல அன்புடன் நேசித்தாள்!
பொங்கல் சோறு; மிட்டாய்கள்
பதுக்கி வைத்தே கொடுத்திடுவாள்!

★★★★★



"தண்டச் சோறு! தடிமாடு!
சட்டிச் சோறு! மடக்கழுதை!!"
கொண்டைக் கம்பால் அடித்தபடி
கோதை இப்படித் திட்டிடுவாள்!

பாவம்! தங்க ராசுவுமே
பார்க்காது போலவே நழுவிடுவார்!
கோவப் பட்டால் அவரையுமே
கோதை திட்டி ஏசிடுவாள்!

போதாக் குறைக்கு வேலுவுக்கு
பொழுது சமயம் இல்லாமல்
ஏதோ வலிப்பு நோய தனால்
இம்சை வந்து வீழ்ந்திடுவான்!

'காக்கா வலிப்பு' நோயென்றார்!
கரும வியாதி என்றார்கள்!!
சாக்கிர தையாய் இருந்திட்டான்!
தண்ணீரைக் கண்டால் பயந்திட்டான்!

"ஐயோ, பாவம்!" என்றேதான்
அனுதாபப் பட்டார் மாமாதான்!
"ஐயையே!" என்று முகம் சுளித்தே
அருவருப் படைந்தாள் கோதைதான்!

கையும் காலும் உதைத்திழுத்தே
கண்ணில் மூக்கில் அடிபட்டே
பையன் வேலு கிடந்தாலும்
பரிகாசம் செய்வான் நாதன்தான்!

துடியாய்த் துடிப்பாள் நங்கைதான்!
தூக்கப் போவாள் வேலுவையே!
அடியாய் அடித்தே தன்மகளை
அதட்டி விரட்டுவாள் கோதைதான்!

★★★★★




புங்கம் பட்டிப் பக்கமெல்லாம்
புஞ்சைக் காடே மிக அதிகம்!
நொங்கு தந்திடும் பனைமரங்கள்
நூறு நூறாய்ப் பலவுண்டு!

மிளகாய்; கத்தரி; கிழங்குகளே
மிகவும் மக்கள் பயிர்செய்தார்!
வளமாய் எதுவும் அங்கில்லை!
வயிற்றுப் பிழைப்பே பெரும் தொல்லை!

'மானம் பார்த்த சீமை' யது!
மாரி பொய்த்தால் பஞ்சம்தான்!
தேனாய் நீரை மதிப்பார்கள்!
தேதி மழையே முதல்கடவுள்!

சாது வேலு மாமியிடம்
'தண்டச் சோறு' பட்டத்துடன்
வேதனை பட்டிடும் வேளையிலே
விபரீதமாய் வந்ததே கடும் பஞ்சம்!

பஞ்சம்! கோரப் பஞ்சந்தான்!
    பாரே காணாப் பஞ்சம்தான்!
புஞ்சைக் கரம்புத் தோட்டமெலாம்
    பொட்டைத் திடலாய் ஆயினவாம்!

வருடம் பாதி ஆகியுமே
    வானம் கருக்க வில்லையாம்!
கருடன் பறக்க வில்லையாம்!
    கழுகுகள் பறக்க ஆயிற்றாம்!

ஆடு மாடு பிராணிகள்
    அனைத்தும் மாண்டு போயினவாம்!
மேடு, பள்ள பூமிகளும்
    வெடித்து வெடித்துப் பிளந்தனவாம்!

குடிக்கக் கூடத் தண்ணீர்தான்
    கொஞ்சம் கூட இல்லையெனில்
வடிக்க அரிசி கிடைத்திடுமா?
    வள்ளிக் கிழங்கும் கிடைத்திடுமா?

★★★★★



கூடை, முறங்கள்; மண்வெட்டி;
கோடாலி பாறை; சுமந்திட்டே
ஆடை கூடச் சரியின்றி
அடுத்த மாவட்டம் செல்கின்ற

தங்கள் உறவு மக்களுடன்
தாங்களும் போக வேண்டுமென
தங்க ராசுவை கோபித்தாள்!
தவியாய்த் தவித்தாள் கோதைதான்!

கறுப்பு வந்ததன் காரணமே
'காக்கா வலிப்புப் பயல்' தானாம்!
அறுப்பு; குவிப்பு பொசிப் பெல்லாம்
அழிந்தது வேலுப் பயலாலாம்!

"வேலுப் பயலைத் துரத்தி விட்டு
மிச்ச நாளில் உயிர்பிழைக்க
நாலு பேரைப் போல்நாமும்
நாளையே போவோம் அயலூர்க்கே!

கொன்று போடனும் பாவியையே!
கோணல் வலிப்பு சனியனையே!"
என்ற வாறு பலப்பலவும்
ஏசிக் கோதை குதித்திட்டாள்!

சோதா நாதனும் வேலுவையே
"துக்கிரி"! "பீடை"! என்றிட்டான்!
காதால் வசவுகளைக் கேட்டிட்டே
கண்ணீர் விட்டான் தனிமையிலே!

"யாரு செய்த பாவமிதோ?
எவரு வைத்த கொள்ளியிதோ?
ஊரு முழுசும் கருகிடுச்சு!
ஓலமிட்டால் ஆயிடுமா?

பஞ்சம் வந்தால், அதற்கிந்தப்
பையன் வேலுவா பொறுப்பாளி?
தஞ்சம் வந்த அனாதையைத்
தப்பாய்த் திட்டுவது பெரும் பாவம்!"

இந்த விதமாய்த் தங்கராசு
இரக்கப் பட்டார் வேலுவுக்காய்!
அந்த ரங்கமாய் நங்கையும்தான்
"அழாதே!" என்றே தேற்றிட்டாள்!

★★★★★



முப்பதாய் நாற்பதாய்ப் பனைமரங்கள்
மொட்டையாய்க் கருகிச் சாய்ந்தனவாம்!
எப்பொழுதும் கலங்கா மாமாவும்
இதனால் மிகவும் சோர்ந்துவிட்டார்!

கோதை மீண்டும் கடிந்திட்டாள்!
"குந்திக் கிடந்தால் கூழ்வருமா?
நாதன்; நங்கை இருவருடன்
நானாவது அயலூர் செல்கின்றேன்!

"தண்டச் சோற்றுப் பயலுடனே
தப்படி கூட நகராமல்
முண்டமாய்க் கிடங்கள்!" என்றிட்டாள்!
மூட்டை முடிச்சுகளைக் கட்டிவிட்டாள்!

ஆத்திரம் தீர வேலுவையே
அன்றும் நன்றாய் அடித்திட்டாள்!
பாத்திரம் எல்லாம் விற்று விட்டாள்!
பயணம் புறப்பட நாள் குறித்தாள்!

"செத்தே மடிந்து போனாலும்
சென்ம பூமியை நான்பிரியேன்!
புத்தியைக் குழப்பாதே! சில நாட்கள்
பொறுப்போம்!" என்றார் மாமாதான்!



மாமியின் கொடுமை தாளாமல்
மாமாவின் பாசம் தனைஎண்ணி
சாமி வேலுவும் வழக்கம்போல்
தனியே கழனிக்கு வந்திட்டான்!

மனசு துன்பப் பட்டாலும்;
வயிற்றில் பசிதான் இருந்தாலும்
தனது உணர்வே இல்லாமல்
தலைசுற்றி வேலுவும் விழுந்திடுவான்!

கருகிக் கிடக்கும் பனந்தோப்புள்
'கங்காணி மோடு' எனுமிடத்தின்
அருகே வந்த உடனேயே
அவனுக்கு வலிப்பு வந்ததுவே!

மாமா கூட 'கங்காணி
மோட்டு'ப் பக்கம் வருவதில்லை!
சாமியார் ஒருவர் அவ்விடத்தில்
சமாதி ஆனதாய்க் 'கதை' யுண்டு!

பூதம்; பிசாசு மோட்டுக்குள்
பதுங்கி இருப்பதாய்க் 'கதை'யுண்டு!
ஆதலால் யாரும் மோட்டருகே
எட்டிப் பார்க்கவும் பயந்தார்கள்!

ஆனால் சாமி வேலுவுக்கே
அன்று மனமே சரியில்லே!
போனான் அந்தக் கங்காணி
மோட்டில்! மயக்கம் போட்டிட்டான்!

கைகால் உதற; பல்கிட்ட
கண்கள் மூடிட மயங்கிட்டான்!
பையன் மயங்கி வீழ்ந்ததையே
பார்த்த ஐந்து ஒருநாய்தான்!

மாமி திட்டி தினம் ஊற்றும்
மாலைக் கஞ்சிச் சோற்றிலும்
சாமி வேலு அந்நாய்க்கே
தானும் கொஞ்சம் ஊற்றி வந்தான்!

அந்த நாய்தான் அவன்தோழன்!
அறிவும் நன்றியும் உள்ளதுவாம்!
'கந்தன்' என்றே அந்நாய்க்குக்
கனிவுடன் பெயரும் வைத்திருந்தான்!

வாயைத் திறந்து பேசாமல்;
வாலைக் குழைத்தே சுற்றிவந்து;
சேயைப் போல வேலுவுடன்
சேர்ந்தே திரியும் எப்போதும்!

காக்கும் நண்பன் வீழ்ந்ததையே
கண்ட கந்தன் துடிதுடித்தே
நாக்கால் தடவி முகர்ந்திட்டே
நான்கு புறங்களும் சுற்றியதே!

"லொள்! லொள்!!" என்றே குரைலத்திட்டே
அங்கும் இங்கும் தாவியதே!
முள்ளிலும் கல்லிலும் வீழ்ந்தடித்தே
முதலாளி வீட்டுக்கு ஓடியதே!

கோதையும் நாதனுமே அங்கிருந்தார்!
குலைத்த நாயை விரட்டிவிட்டார்!
பாதை வழியே திரும்பியது!
பாலத்தைத் தாண்டி ஓடியது!

அம்மன் கோயில் திடல் நோக்கி
ஐம்பது அறுபது ஆண்பெண்கள்
"சும்மா வாங்க!" என்றதட்டித்
தொடரும் பிள்ளைகளுடன் சென்றார்க

வறண்ட பூமியைப் பார்வையிட
வந்தே இருந்தனர் அதிகாரிகள்!
திரண்டே இருந்தது சிறுகூட்டம்!
ஜீப்பும் காரும் நின்றனவாம்!

தரையின் அடியில் ஆழத்தில்
தாவி ஓடும் நீரூற்றை
அரசினர் ஆணையால் கண்டறிய
அங்கே வந்தனர் அதிகாரிகள்!

பலப்பல இடங்களும் பார்த்தார்கள்!
பாறைகள் அருகும் ஆய்ந்தார்கள்!
"நிலத்தடி ஊற்று இப்பக்கம்
நிச்சயம் அகப்பட வழிஇல்லை!

நிலத்தின் அடியில் ஓடுகின்ற
நீரின் ஓட்டம் கண்டறியும்
'எலக்ட் ரானிக்' கருவியதும்
ஏனோ பழுதாய்ப் போயிற்றே!

"உங்கள் அதிருஷ்டம் அவ்வளவே!
ஊம்! ஊம்! கிளம்புவோம்!" என்றார்கள்
தங்க ராசுவும் அங்கிருந்தார்!
தாங்க முடியா வருத்தமுற்றார்!

கூட்டமும் மெல்லக் கலைந்த பின்னால்
குலைத்து வந்தது கந்தன்தான்!
வேட்டியைக் கடித்து ராசுவையே
வேகமாய் இழுத்தது பனந்தோப்புள்!

ராசு ஓடினார் அப்பக்கம்!
இன்னும் சிலரும் போனார்கள்!
மீசை வைத்திருந்த அதிகாரி
விஷயம் யாதென விசாரித்தார்!

சூதுகள் ஆடியும் 'முடிச்சவிழ்த்தும்'
'டூப்பு' விட்டும் திரிகின்ற
'ராது' என்னும் சோம்பேறி
ராகம் போட்டுச் சொல்லிட்டான்;

"வேலு வேலுனு ஒருத்தங்க!
வேப்ப மரத்து வீட்டிலேதான்
நாலு வருசமாய் இருக்காங்க
நல்ல பையன் தானுங்க!..."

"அவனுக் கென்ன இப்போது?
அதைச் சொல் லுங்க நேரடியாய்!"
கவனமின்றிக் கேட்ட அதிகாரி
காரை நெருங்கினார் சிகரெட்டுடன்!

"வேலுப் பயலுக்கு வியாதிங்க
வெறச்சி முறைச்சி விழுந்திடுவான்!
காலும் கையும் லொட லொடக்கும்!
'காக்கா வலிப்பு' என்கிறாங்க!

பாவம் அவனை இப்போது
பூதம் அடிச்சிப் போட்டிடுச்சி!
சாவப் போறான்! கங்காணி
சாமியார் லேசுப் பட்டவரா?"

அடுத்த நிமிடமே அதிகாரி
அந்தக் காரை விட்டுவிட்டு
மிடுக்காய் ஜீப்பில் குதித்தேறி
விரைந்தார் கங்காணி மேட்டுக்கே!

★★★★★



'காக்கை வலிப்பு' நோயுள்ளோர்
காலால் நடந்து போகையிலே
தேக்கமாய் ஓட்டமாய் நிலத்தடியில்
தண்ணீர் இருந்தால் வலிப்பு வரும்!

கங்காணி மேட்டின் பக்கத்தில்
கணக்காய் வேலு வீழ்ந்ததனால்
அங்கே நிலத்தின் ஆழத்தில்
அவசியம் தண்ணீர் இருக்குமென

அந்த அரசு அதிகாரி
அறிந்து கொண்டதால், ஆய்ந்திட்டார்!
வந்த வேளை நல்வேளை!
வற்றா நீரின் ஊற்றோட்டம்,

கங்காணி மேட்டின் அடியிலேயே
கச்சிதமாய் ஓடுவதைக் கண்டறிந்தார்!
பங்கறை ஏதும் இல்லாமல்
பருகவும் பயன்படும் நீரதுதான்!

அந்த இடங்களில் பலகுழாய்கள்
அமைத்துக் கொடுத்தார், மிக விரைவில்
அந்தப் புங்கம் பட்டிக்கே
அதிசயம் வந்தது அதனாலே!

★★★★★



"காக்கா வலிப்புக் காரனென
கண்டவரும் இகழ்ந்த வேலுவினால்
ஆக்கமும் வளமும் பெருகிவர
அற்புதமாய்த் தண்ணீர்ப் பொங்கிற்றே!

'தண்டச் சோறு' என்றெல்லாம்
தாக்கிப் பேசிய கோதையும்
கொண்டாடித் தழுவி வேலுவையே
கண்ணீர் வழிய வாழ்த்திட்டாள்!

நாதனும் புத்தி திருந்தி விட்டான்!
நட்பாய் பழகினான் வேலுவுடன்!
ஆதரவாய் இருந்த நங்கைக்கும்
அளவிலாப் பெருமை வேலுவினால்!

★★★★★




'கந்தன்' 'வேலு' இருவருமே
கண்மணிகள் ஆயினர் ராசுவுக்கே!
சொந்த நிலத்தில் பனந்தோப்புள்
தோன்றிய அதிசய நீரூற்றை,

வழிபடும் தெய்வமாய், தேவதையாய்
வணங்கி மகிழ்ந்தார் ராசுவுமே!
பொழிந்திடும் நீரின் புதுஊற்றால்
புங்கம் பட்டியே தழைத்ததுவே!

தீராப் பஞ்சம் தீர்ந்திடவே
தெய்வம் போல உதவிட்டச்
சீராளன் வேலு நோய்தீரச்
சிறப்புப் பணமும் அளித்தார்கள்!



# தெய்வத்துக்கும் கோபம்!

இரவு நெருங்கும் நேரம்! - ஊர்த்
தெருவில் தோப்பின் ஓரம்!
கடுக டுக்கும் கிழவி - சந்தைக்
கடை முடித்து வந்தாள்!

வீட்டைத் திறந்து நுழைந்தாள்! - பசிச்
சேட்டை தன்னால் குழைந்தாள்!
வடித்து வைத்த சோறு - மிளகு
பொடித்து வைத்த சாறு

இருந்த சட்டிகள் காலி! - யாரோ
புரிந்த திருட்டு ஜோலி!
கோபம் பொங்க லாச்சு! - வயிறு
சாபம் கொடுக்க லாச்சு!

அந்த வேளை ஏதோ - சத்தம்
வந்த பக்கம் மீதே
மெல்ல எழுந்து போனாள்! - கோபம்
துள்ளக் குமுற லானாள்!

குட்டிப் பூனை இரண்டு - வீணே
கட்டித் தரையில் புரண்டு
போட்டது பாரேன் சண்டை! - அறை
வீட்டுச் சன்ன லண்டை!

எட்டிப் பார்த்தக் கிழவி - கைகள்
நெட்டி முறித்துத் திட்டித்
தாவி ஓடிப் பிடித்தாள்! - அவற்றை
ஆவி நோக அடித்தாள்!

வாலைப் பிடித்து ஒன்றைச் - சிறு
காலைப் பிடித்து ஒன்றை
வாசல் வழியே எறிந்தாள்! - கதவை
ஏசித் தாழ்ப்பாள் இட்டாள்!

வானம் வெடித்தது இடியை! - மின்னல்
வாணம் ஒடித்தது கொடியை!
கருத்த மேகம் குவிந்தது! - ரொம்பப்
பெருத்த மழையும் பொழிந்தது!

ஊதிச் சீறும் காற்றில்! - பூனைகள்
மோதித் துடித்தன சேற்றில்!
திருடித் தின்ற பாவம்! - அதனால்
தெய்வத் துக்கும் கோபம்!



# லட்டும் துட்டும்!

மூலைக் கடையின் சேட்டு - படா
மோட்டாவான சேட்டு!
சேட்டு விற்கிற ஸ்வீட்டு - ரொம்பச்
"ச்சீப்பு!" ஸ்பெஷல் ரேட்டு!

கோணல் மூக்குக்கிட்டு - பொல்லாக்
குறும்புக் காரக் கிட்டு!
மூக்கைத் துளைச்சுது வாசனை! - கிட்டு
மூளையைக் குடைஞ்சுது யோசனை!

கடையை பார்த்தான் கிட்டு! - அவன்
கண்ணைப் பார்த்தார் சேட்டு!
லட்டுக் கேட்டான் கிட்டு! - கிழ
லாலா கேட்டார் துட்டு!

துட்டைக் கொடுத்தான் கிட்டு! - ஒரு
லட்டைக் கொடுத்தார் சேட்டு!
கிட்டு எடுத்தான் ஓட்டம்! - சேட்டு
துட்டில் விட்டார் நோட்டம்!

எட்டிப் போனக் கிட்டுக் - கொஞ்சம்
பிட்டுத் தின்றான் லட்டை!
தூக்கி எறிஞ்சான் லட்டை! - ச்சீச்சீ
“போக்கிரி” என்றான் சேட்டை!

துட்டை வீசினார் சேட்டு! - கிட்டை
“ரெட்டை வாலு” என்றார்!
லட்டு என்ன லட்டு? - முழுசும்
கெட்டுப் போன லட்டு!

துட்டு என்ன துட்டு? - பழைய
மொட்டைத் தலையின் தட்டு!
லட்டுக் கேற்ற துட்டு! - அந்தத்
துட்டுக் கேற்ற லட்டு!





நிவேதிதா
புத்தக பூங்கா



சங்ககால இலக்கியங்களையும்
சிலப்பதிகாரம், திருக்குறள் போன்றவைகளையும்
படிக்க உங்களுக்கு உந்துசக்தியாக இருந்தது எது ?

இலக்கியத் துறையில் என் திறனை
வளர்த்துக் கொள்ள துணை நின்றவை
அண்ணாவின் எழுத்தோவியங்களும்,
புரட்சிக் கவிஞரின் கவிதைகளும்
என்பதை மறக்க முடியாது.

கவிஞர் சுரதா, கவிஞர் மாவெண்கோ
(வயலூர் சண்முகம்) கவிஞர் கா.மு. ஷெரீப்
ஆகியோருடன் நெருங்கிப் பழகும் மாணவப்
பருவத்து சூழ்நிலையும் உந்து சக்தியாக இருந்தது
என்பதை இப்போது நினைத்தாலும் நெஞ்சு இனிக்கிறது !

—தமிழக முதலமைச்சர் கலைஞர். மு. கருணாநிதி